உ

கடவுள் துணை.

# குலசங்கர மாலை.

இஃது

நாராயணவள்ளுவரால்

இயற்றப்பட்டு.

ஷையார் குமாரர்

வையாபுரிவள்ளுவரால்

கொடுக்கப்பட்ட பிரதிக்கிணங்க

மதுரை

ம. அழகர்சாமி பிள்ளையவர்களால்

அச்சிடப்பட்டது.

இதன் விலை] [அணா 2

உ

கடவுள் துணை.

# குலசங்கரமாலை.

## கடவுள்வாழ்த்து.

### காப்பு-விருத்தம்.

ஓதுந்தரும முதனான்கு முணர்த்தும் வேத
ப்பயிற்சியின்றித், தீதுபுரிவிப் பிரர்வலையிற் றிய
ங்கி யுழலவோர்க் கன்னவர்தஞ், சூதுவெளியாம
பொருட்டொருநான் சொல்லுவ குலசங்கரமாலைக்
கேதுமுத லீறின்றிநிறைந திலங்கு மிறைவனே
காப்பாமே.

### வெண்பா.

தாரிலங் நம்வைசியர்காள் தத்சூத்திரர்காள்மெய்
பேரிலங்குந் தேவப் பிராமணரிப்—பாரிலுறப்
பஞ்சமரா மெங்குலத்துப் பார்ப்பாரையன்னவரெ
ன்,றஞ்சலிசெய் தேத்துவதென் னும். (1)

ஆன குலத்தி லவதரித்தும் மானவருய்
ஞானாலை கற்றுணர்ந்தும் நாணின்றி—யீனமிகும்
விப்பிரோ சாமியென்று மேவுமுலமை மேலவரோன்
றெப்படியாங் கையெடுப்ப தீங்கு. (2)

ஈங்கிவ்வா றும்மை யிழிவுறச்செய் தும்பொருளை
வாங்குதற்குத்தக்கபொய்யும் வஞ்சகமு—மோங்கு
மவர்,தோற்றமுந்தாய்தந்தையர் தந்தொல்குலமும்
யாமுரைக்ச, வாற்றலுறக் கேண்மினடுத்து. (3)

அப்பன் வசிட்ட னருந்ததியாந் தாயிவர்க்கு
வுற்பவித்த நூற்றுவரி லோர்நால்வர்—விப்பிரராம்
மற்றவர்யா மாகிலொரு வங்கிசமன் றென்றுரைத்
குற்றவகை யாதுசொன்மி னோர்ந்து. [தற்(4)

ஓங்குபசுவைக்கொன்றுயர்மகஞ்செய்தற்கியைதல்
தீங்கெனவேயெந்தையெமைச்சீறியே நீங்களினிச்
சென்றுவெளிச் சேரியராய்ச் செத்தபசு வைப்புசி
றென்றுரைத்தார் சாப மெமக்கு. ப்பீ(5)

எம்மைப் பிரிந்தாங் கிருந்தமற்ற வீரிருவர்
தம்மையுமிவ் வாறுகத் தாரணியி—லம்முனியுட்
சேரியராய் நீருமினிச் சென்றுறைவீ ரென்றுரைத்
சீரியநன் னுவாற் றெரிந்து. [தார்(6)

தெரிந்தண்ணல் சொற்படியே சென்றிருபா லாகிப்
பிரிந்தமுத லின்றளவும் பேணிப்—பொருந்துந்
தொழிலொன்றிற் சீவனஞ்செய்தோற்றமறிந்தெ
யிழிவுரைத்தற் கென்னு மிடம். [ம்மை(7)

இங்கெமக்கு முன்னே யிழிவுதொழிற் செய்தகுல
சங்கரரைச் சேர்ந்து சதாகால—மங்குபசுத்
தோற்பறைகள் சாத்தியும்பின் றொல்சுடலை சாத்
ஞற்கழிக்கின் றேமெமது நாள். [துமத(8)

நால்வரெங்கண்முன்னோர் நவிலும்புராணமதைச்
சாலவுணர்ந் தல்வழியைச் சாற்றியே—நாளுஞ்
சிரார்த்தகர்ம பிண்டமதே சீவனஞ்செய் தெம்
விராப்பகலைத் தள்ளுகின்றோ ரிங்கு. [போ(9)

இருக்குமறை யாகமநூ லின்பயிற்சி யால்நும்
வருக்கத்தோர் செய்வந் தனையாற்—செருக்குற்
றிடையிற் பிராமணர்யா மென்பாத னூற்று
முடையவ ராவரோமற் றேதும். (10)

ஓதுமுகத் துற்பவித்த வொண்குலவியாதன்சொற்
சூதுபுரா ணத்துத் தொழுகுலமா—மீதிரண்டுந்
தங்குலமென் றோதற்குத் தக்கவர்வே றுமிவர்க
ளெங்குலத்தார்காண்மி னியைந்து. (11)

இருந்தவனு மெந்தை யெழிற்கணிகைமாது
தரும்புதல்வன் சக்கிலியர் தம்மா—தருந்ததிதாய்
புத்திரர்யா மெம்மிற் புலையன்பி ராமணனென்
றெத்திறத்தாஞ் சொன்மி னெடுத்து. (12)

எங்களுடன்பிறந்தே யெங்களைத்தூ ஷித்துவருஞ்
சங்கநுமைத் தோராது தாரணியிற்—றங்குமுதற்
சாதியரென் றுங்குலாச் சாரியரென் றும்மவனா
யோதியதெவ் வேதவுண்மை யால் (13)

ஆதிப்பி ராமணர்க ளெவரையும் விட்டெங்கள்
சாதிப் பிராமணரைத்தான் றுதிக்கும்—பேதையரோ
உம்மைப் புகல்வது லகிலறியாம
லெம்மைப் புலையரென்ப தென் (14)

எம்மைத்தீண் டாதகுல வினரொன்றீ ரெங்குலத்
தோ, ரும்மைத் தீண்டாதவரொன் றேதுகின்று—
ரிம்மயக்கச், சூதையறியாமற் சுழன்றுமருண்டலை
யும், பேதையர்க்கார் சொல்வார் பிழை (15)

பிரமாவின் சேயரெனப் பேசு மவரிற்
றிரமொருவனேனுமதைத் தேர்ந்திட்—டிரவாமல்
வையகத்திப்பிரமன் வண்டொழிலைச் செய்தால்
வே, றையமில்லை யென்போ மவர்க்கு (16)

அற்றவுடற் சிலைபதன் வாய்க்கரிசி தந்தெமக்கு
மற்றகர்ம பிண்டமுமவ் வத்திரமு—மற்றவர்க்குத்
தந்துமுணாரார்போற் சகோதரன்றென்றுணரப்ப
தெதற்கலித பேதத்தமை (17)

எம்மோடிருந்தன்ன மின்பமுட னுண்டவவர்
தம்மோடே யுண்ணத் தகாதவரா—யும்மைத்
தலைக்கடையில்வைத்தவர்கள் தாமுண்டபின்னெச்
சிலைக்கடைய ராயுணவென் றோர்வு (18)

தேறும்பிராமணர்க்குச் செய்தொழிலைந்தென்றிரு
க்க, வாறுதொழிலென்றுரைத் திவ்வம்புவியில்—மா
றுதொழிற், செய்ததனாற் சந்ததமுஞ் சீவனமே
கொண்டுலகி, லெய்துமவர்க் கென்னாகுமேது (19)

ஏர்ப்பதிகழ்ச்சி யெனவுணர்ந்தும் நாடோறு
மூர்ப்பலவுஞ் சென்றிரந்தே யுண்பவர்தந்—தார்ப்
பரியந், தோற்றியுமப் பேரவர்க்குச்சொல்லாதவே
றுபெயர், மாற்றிவைத்ததென்னைமறைத்து (20)

மறையான்மறையோனிம் மாநிலத்திற்கொட்டும்
பறையான்பறையனென்றே பன்னும்-முறைமையி
னாற், சாதிவகுத் தாலுந் தலைமுறையா யுள்ளதா
யாதிவழக் கெவ்வகைபோ மின்று (21)

யாகமெனச்செய்தே யிரும்பசுவைக்கொன் றருந்து
ம, பாகமுறுமெங்குலத்துபார்ப்பாரை-மோசமுற
தண்டமென்பீர் செத்தவைப்பின் றின்னுமெமைக்
கண்டால்நீர், கொண்டொன்பி ரீதென்சொலும்

சொன்னவயன்முகத்திற் ருேற்றும் பிராமணரொன்
றின்னிலத்தில் முன்ன மிசைத்தவரோ—பின்னும்
பிரமக்கி யானத்தாற் பிராமணரென் றேதிற்
றிரமெதுவாந் தேர்ந்துரைசெய் வீர் (23)

செப்பும் புராணச் செகப்புரட்டர் கட்டிவைத்த
தப்புச்சுலோகத்தின் றன்மையெல்லா—மிப்புவியிற்
பொய்யெனவே தோன்றப் புகலுமிந்தக்கட்டுரை
போல், வையகத்தி லாருரைப்பார் வந்து (24)

வந்தகுல மறைத்துமற் றோர்குலப் பெயர்கொண்
டந்தரமாச் சீவனஞ்செய் யாசகரைச்—சந்ததமுந்
தெய்வம்போல் நம்பித் திரிவீ ருமக்கதனு
லெய்தும்வா றேதோ வினி (25)

இந்தயுக மையா யிரமும்போ னல்நடுவே
வந்தகுல மும்போய் மறையும்போய்ச்—சொந்தமு
றைத், தெங்குலத்தை யேவந் திரப்பரன்றுளென்
புகலு, முங்குலத்தை யிந்த வுலகு (26)

உலகாணிக் கோல்நீதிக் கோலுயர்த ராசுக்கோல்
நலமேவு தாற்கோலிந் நான்கும்—குலநான்குக்
குள்ள திவற்றிலவர்க் கொன்றேனுமுண்டுகொலே
விள்ளவுரை செய்வீர் விரைந்து (27)

விக்கிரகஞ்செய்தமைக்கும் வீறுசிற்பாசாரியர்தாந்
தக்கபுவி மீதிருக்கச் சந்ததமும்—மிக்கவதைப்
பூசனைசெய் தேதுதிக்கும் புல்லராயாசாரியரென்
றேசுவதென் னீவி ரெடுத்து (28)

எடுத்த குலத்தி னிழுக்கறுமோ நீரி
லடுத்துப் பலமூழ்கி னாலுந்—தொடுத்தமறை
முற்றுமுணர்ந்தா லு முறைதெரிந்திவ்விப்பிரர்தாம்
மற்றெவைசெய் தா லும் மகிழ்ந்து (29)

மருவலரைச் சங்கரிக்க வாள்சிருஷ்டித் தீந்த
குருகுலத்தையவ்வாள்கொண்டோச்சிப்-பொருமு
யிரைக்,கொல்லப்பகைவளர்க்குங்கோளரவர்தாம்
பெற்ற, புல்லறிவுக் கென்னை பொலிவு (30)

பொய்யிதுபங்காளிப் பொருமைகுணமென்பீரேற்
கையினெல்லியங்கனிபோற் காட்டுவோஞ்—செய்
தானம்,சீவப்பசுவவர்க்குஞ் செத்தபசுஎங்களுக்கு
மீவ துலகமெடுத் தீங்கு (31)

ஈன்றூர் பிராமணரா மென்னி லவர்தமக்குத்
தோன்றுஞ் சுதன்சூத் திரனாமோ-ஆன்றெந்தக்
கோத்திரத்தி லுள்ளதனைக் கூறுவீர்விப்பிரர்தஞ்
சாத்திரத்துக் கன்றே சரி [32]

சக்கரமுஞ் சங்குஞ் சடகோப முங்கொடுக்கத்
தக்கவனை விட்டுத் தரிப்பவனை-மெய்க்குருவென்
றேத்திப் பணிய விருநிலத்தி லுங்களுக்கெவ்
வாத்தியார் சொன்ன வழி [33]

வந்த முனியால் வரும்மவரும் யாங்களுமே
யிந்து மனிதர்க்கு மிரோப்பியர்க்குஞ்—சந்ததமுஞ்
சோறுக்கிட் போடுந் தொழும்பாள ராகிலெம்மை
வேறுக்கின தெவ்விதம் [34]

விப்பிரரேயுங் குலத்து மெய்க்குருவாமென்னிலவர்
செப்புமுமக்கே வுபணி செய்வதென்னே—எப்பொ
ழுதுஞ், சோறுசமைத் தும்விதித்த தொண்டுசெ
ய்வதென்னேவவ், வாறுரைமினன்பினடுத்து [35]

அடுத்துளவைந்தாங்குலத்த ராமவனைச்செங்கை
யெடுத்துத் தொழுவீரவரோ—டடுத்துதித்த
எம்மையுமவ் வாறுசெய்யா தீனனென விடுத்தல்
சம்மதமோ இங்குமக்குத் தான் (36)

தானெனுமவ்விப்பிரர்கள் தங்குலமாம்பித்தளையோமே
லானதங்கமென்றுயர்த்தற் காகுமெனின்-மானவர்
செய், நற்கப்புடத்திற்குஞ்சாற்றுமறையாணிச்சம்
நிற்சவயமாமோ நிலத்து [37]

நிலையற்ற விப்பிரரால் நிட்சயமா மோட்சத் [நீர்
தலமடைவோமென்றவனைத் தாழ்ந்திந்-நிலமிசை
போற்றுதன்மையோர்மட்புரவியைநம் பிப்பெரிய
ஆற்றி னிழிந்தகதை யாம் (38)

ஆநந்தி லுற்பவித்த வைவரா லெவ்வுலகு
மாநலம்பெற் றுய்யும் வழிமறந்தவ்-வாநந்திற்
ரும்பிறந்தோ மென்றுர் சரியென்றெண்ணுந்தகை
யீர், யாம்பிறந்த தெந்த விடம் (39)

இடதுகரத் தாசிசெய்வா ரின்பதுன் பத்திற்குத்
திடமாம் புராணவழிச் செய்வா-ரடமுறவே
வேத முமக்கோத விதியில்லை யென்பார்நும்
மாதரவு பெற்று மவர் (40)

அழையாமுன் னைம்பதுபேர் யாசகத்துக் கெங்கும்
நுழைவார்வை தாலுமதை நோக்கா-ருழைபோல்
விழிப்பாரெம்போலுழைத்திம்மே தினியிலுண்ணு
ர், பழிப்பா மவர்பிழைப்பின் பாடு 41

பாரிலெ வர்க்கும் பௌரோகித ரென்றே
பேரிட்டுக்கொண்ட பெருஞ்சூதைத்-தேரில்
நெறியா ரிடத்தின்றிநீணிலத்தி லேது
மறியா ரிடத்தினிலே யாம் (42)

ஆரணம் வாசித்தாலுமக் காகாதென்றேபுனைந்த
காரணத்தை யின்னதெனக் காணலாம்·பூரணமா
யுள்ள வனுபவத்தை யோதுமிவற் ருலவர்தங்
கள்ளமதைத் தேர்ந்துணருங் கால் (43)

காலக்கி யானக் கருத்துணரா ராகிமுற்றுஞ்
சீலக்கியான ரென்றித் தேயத்திற் —சாலக்
கருதியும்மை நட்டாற்றிற் கைவிடுவ ரீதே
குருமொழியா மென்றுளங்கொள் வீர் (44)

கொண்டபொய்வேடத்தாற் குலமுயர்ந்தோமென்
றவரைக், கண்டுசெங்கைகூப்புங்கருத்திந்த-மண்ட
லத்திற், ருேற்போர்வை யாற்புலியைத் துய்யபசு
வென்றெண்ணுந், தாற்பரியமாந்தெளிமின்சார்ந்து

சாதலொடு கர்மாந் தரந்திவச மேயுமக்குப்
போதவர வேண்டிநிதம் பூசிக்கும்-பாதகர்த
மாசியினல் வாழ்வதென்றிவ் வம்புவியில் நீரொடுத்
துப், பேசுவதெவ் வாறவரைப் பேணி (46)

பேசுபஞ்ச பூதமெனப் பேருலகை யாதரிக்கு
மாசிரிய ரவரைவிட்டாங்குமக்கோர்—காசும்
பயனற் றவரைப் பணிந்ததனுற் கண்ட
நயனென்கொல் சாற்றுமினின் ருள் (47)

நாடுந்நற் சீவனமும் நற்றுகிலும் பொற்பணியும்
வீடுங் குலமும் வியன்பொருளும்-நீடுமவர்
கிர்த்தியத்தா லாவதன்றிக் கிஞ்சிதமும் விப்பிரர்
செய், விர்த்தியினா லுண்டோ விளம்பு (48)

விளம்பும் புராண விதியா லவர்தங்
களங்கமதைச் சற்றுங் கருதா-துளமயங்கிக்
கைப்பொருளெலாங்கொடுத்துக் கையிலோடேந்
துமுங்க, ளற்பமதிக் கென்புகலலாம் (49)

ஆலயமுந் தேவதையும் ஆனதிருத் தாலியுமிஞ்
ஞாலமிசைப் பெரிதாய் நாடுங்கால்—சாலச்
சிருட்டித் தவர்சிறிய ரென்பரோ மற்றோர்
மருட்டின் மயங்கா தவர் (50)

ஐந்து தொழிலின்றி யமையா துலகமெனில்
மந்திரமுந் தந்திரமும் மாதவமுஞ்-சிந்தனைசெய்
வேதமுஞ்சங் கீதமுமிவ் விப்பிரரு மற்றவரும்
போதமும்வந் தெங்குறுமப் போது (51)

போளிவடை யப்பம் பொரிக்கறியும் போசனமும்
நாளும் புசித்தவுங்கள் நாவவர்தங்கோளுறைக்கக்
கூசுமெனி னன்னோர்குலம் வெளியாய்மற்றுலகோ
ரேசுமொழிக் கென்புகலுவீர் (52)

புகல்வீ ரறுசமயப் பொற்பேழையுஞ்சீர்
திகழுமறைப் பொக்கிஷமுஞ் சேர்த்துத் தகையுற
வே, தந்தருளுஞ் சற்குருவைத் தாமறைவுசெய்தி
டையில், வந்தவிவர்க் கென்னும் வகுத்து (53)

வகுத்தபஞ்ச கிர்த்தியஞ்செய் மானவரைத்தானே
மிகுத்த மறைநான்கும் விளம்பப்—பகுத்தறிந்துந்
தாமென்றுற் றோராது தற்பரா மணரவரே
யாமென்று லெவ்வழியி லாம் (54)

ஆய்ந்துணர்ந் தோரும் அறியாக் கயவருமே
வாய்ந்தகுல முன்னோர் வழக்கமென்பார்-தோய்ந்
தகொடும், பொய்யுரையாற் றும்பூசுரனொன்னு மீங்
கவரை, மெய்யெனவே போற்றும் விதி. (55)

விதியினு லிங்கவர்க்கு மேவுசென்ம கர்மத்
ததியிலேந்து முத்திரைதந் தாண்ட பதியவர்க்கும்
முற்பிறந்தோ மென்னுமொழிவழுவன்றென்றிவர்
க்குப், பிற்பிறந்தோர்சொல்லும்பிரித்து (56)

பிரிவா யெடுத்துரைக்கிற் பேதகமென்றெண்ணித்
தெறியா தவர்போற் றியங்கித்திரிவீர்முன்
னுந்தியறுக் கச்சூரி யுண்டுபண்ணித் தந்ததெவர்
சிந்தித்தார் காணுந் தெளிந்து (57)

தெளிவாக வெவ்வளவு செப்பிடினுமாற்றிற்
புளிகரைத்தா லென்னவொரு போது-மிளிவகலா
தெக்காலும் பெற்றிருக்க வெண்ணிலவர் புராண
மக்கால மெவ்வகைபோ மால் (58)

ஆங்கால மையா யிரமா மதற்குமேற்
போங்காலம் வந்து பொருந்துங்கால் —நீங்காதும்
பொய்ச்சுலோ கங்கள் புராணங்கள் யாவுமன்று
மெச்சுவீ ரின்னூலை வேண்டி. (59)

வேண்டுசர்வ மானியங்கள் விட்டரசர்யாவரும்பல்
லாண்டுதொறுந் தானவிதியாங்கனைத்து-மீண்டெ
மக்கே, தந்தனரென்றேதிலவர் சாம்பிரதாயந்தெ
ரிந்தோ, ரெந்தவகை யீவா ரியைந்து (60)

இலகுசாதி மூல மிருடிமூலந்தேர்ந்
துலகிலெவ ரேனுமுரைத்தால்—நலனன்
றெனச்சொலியிந்நாள்வரையிலேய்க்குமிவர்சூதை
மனத்திடையே காண்பீர் மதித்து, (61)

மதியின்றியெம்மை மறந்துசிலர் தம்மாற்
கதியின்றி யேகை விடினுங்—குதிகொள்ளுஞ்
செல்வவளங் கொண்ட சிலருமவ்வா றுகிலென்ன
வல்வயிரக் கல்லா மனம் (62)

மனவலியுஞ் செல்வமுமிம் மாநிலத்தி லார்க்கு
மனவாத நிற்றலரி தென்னிற்—றினமுமவர்
நிந்தனைசெய்தேபிசமும் நேர்மையற்றோர் காலமெ
மை, வந்தனைசெய் தேற்ற வரும் (63)

வருமதியும் வெங்கதிரும்வாய்ந்தவமாவாசை
பெருதினத்திற்சேர்வனபோற்பின்னு-மிருவர்களு
ஒன்றாகிக்கூடற் கொருகாலம் வந்தமையும்
நன்றா யுணருமிதை நாடி. (64)

நாடும் வசிட்டமுனி நாதன்வியாதனொடு
பாடும் பதினெண்மரும் பாரில்—நீடு
முகந்தோறுமுள்ளவரொன் றேதுமன்னா லன்றித்
தகுந்த கரி யாதுசொல்வீர் தாம் (65)

தாவருமை யாயிரசம் வத்சரத்திற் குங்குறைவா
மேவுபுராணம்விளம்பும் நாளென்னிற்-றேவரொடு
தாமுமிருந் திந்திரற்குத் தண்டிகைதூக் கித்திரிந்
தாங், கேமமுற வாழ்ந்ததெந்த நாள் (66)

எழுதுமறையை யெழுதா மறையெனும்பேர்
வழுவுறா துள்ள வரைக்கும்—பழுதாம்
புராணமே யுங்களுக்குப் போதித்துத் தங்கள்
பிராணனைக்காத் தற்கமைத்த பேர். (67)

பேராயி ரங்கொண்ட பெம்மா னெவர்களுக்கு
மாராயுங் காற்பொதுமை யாகுமெனிற்—பாரிலவ
ரோதுமறையைந்து மவரொருவர்க்கேயென்னுஞ்
சூதுணரா தென்னே சொலும் (68)

சொல்லும்வடநூற்றொகைபலவுந்தொன்மையதே
செல்லும் பொருளென்றே சிந்திப்பீர்—அல்லும்
பகலுமறை யைந்தையுமே பாராய ணஞ்செய்
தகமகிழ்ந்தா லுண்டா மருள் (69)

அருள்சேர் பிராமணரை யங்கீகரித்துத் [ற்
தெருளாதுதொண்டவர்க்குச்செய்யா-திருநிலத்தி
ருழ்ந்தவரைத் தாழ்ந்துசரண்புகுமா றும்மையிரு
ளாழ்ந்தநர கிற்சேர்க்குமால் (70)

ஆலமமுதென்று லருந்துவ போற் கர்மாநு
கூலப் பழவினையின் கொள்கையோ—மூலத்தைக்
கண்டுங்கா ணாதவர்போற் காமுற் றவர்சொல்லைக்
கொண்டு தொண்டு செய்யுங் குணம் [71]

குணனுங்குலனுமிலாக் கொள்கை யுடையோரைப்
பணமுந் துகிலும் பதியும்—உணவுமளித்
தாசிரிய னென்னு மருநெறியைக் கைவிட்டா
லேகமொழிக் காமோ விடம் [72]

இறந்திடுதாய் தந்தையர்க ளின்புறமற்றோர்க்குப்
பிறங்குதுகி லும்பொருளும் பேணிச்—சிறந்தளித்
தல், தென்னாலு ராமனன்று செய்கதையா மல்ல
தவர், முன்னாள் கொடுத்த முதல் [73]

முற்பிறந்தோ மென்றியம்பி முட்டியெடுக்கின்றார்
கள், பிற்பிறந்தோர்மூவருமிப்பேருலகி—லெப்பொ
ழுது, பாராளவ் யாபாரம் பண்ணைப் பயிர் செய்ய
நேராகத் தேர்ந்தவனொன் னே [74]

நேர்ந்த சமஸ்தான நிருபருமற் றின்னுமின்பஞ்
சார்ந்தபெருஞ் செல்வருமித் தாரணியிற்—சேர்ந்த
வர்போய, கால்வைத்து வைத்துக்கடத்தே றின
தறியீர், கோலுங் குடைவையுங் கொண்டே [75]

கொள்ளுமா னத்தாட்சி கூச்சமொடு நாணமச்ச
முள்ளத்திற் சற்றுமவ ருன்னாது—வள்ளலெனப்
போற்றியொருவன்கைப் பொருள்பறித்தற் காவி
கொளுங், கூற்றையனே யக்கூறலாம் [76]

கூடாக் குலமென்றே கூறியுள்ள காலமெல்லாம்
பாடா தவருண்டோ பாருலகில்—நாடாச்
சரிதைமுதல் நால்வழியைச் சார்ந்தவர்கள் யாருந்
தெரியவெளி யாயவரைத் தேர்ந்து [77]

தேறிச்ச கோதரனைத் தீண்டா தவரென்றே
கூறிப் படியேறிக் கூசாமல்-மீறி
விடியுமள வுந்திருடில் விட்டிடுமோ சும்மா
படியிலவர் நற்சகுனம் பார்த்து [78]

பாத்திரந்தேர்ந்துள்ளம் பரிந்தளிக்கப் பிட்சையெ
ன்றுங், கோத்திரந்தேர்ந் தேபெண்கொடுக்கவென்
றும், சாத்திரத்திற், செப்புவதைக்கண்டுஞ் சொற்
சேத்ரமிலாதவருக்கொப்புவரோசற்றுமற்றுளோர்

ஓதுதச தானம் ஒழுக்கந் தவமுயற்சி
கோதி லறுசமயக் கோட்பாடும்—மேதினியில்
தேர்திருவி ழாபுண்ய தீர்த்தமிவை யாவுமுமக்
கார்வழியி னல்வந் தது [80]

ஐம்முனையாற் பாரனைத்து மாதரிக்கு மாசிரியர்
தம்மை யிகழுந் தவரெல்லா—மிம்மையிலே
காட்டா விடினு மன்னோர் கண்ணீர்வீ ழாதவிடா
மாட்டா தெருமைக்கு மே, [81]

மைக்குழலாரின்றியன்னுள் வாய்த்தவெங்கள்கோ
த்திரத்தர், பக்கித் தவளைப் பசுநரிமான்—குக்க
லொடு,கூடிப்பிறந்தவவர்கோப்ராமணரெனப்பேர்
சூடியவா றென்னே சொலும். [82]

சொல்லுநால் வேதத்தொழுமெழுநான் காகமங்க
ள், வெல்லும் புராண விதியனேத்தும்—எல்லேயற
கற்றதனு லக்குணத்தைக்காட்டுமென்றிமேற்குலத்
தின், பெற்றியெவ்வா ருமெடுத்துப் பேசு [83]

பேருயர்ந்த வெங்கள் பெரியோருக் கெள்ளுந்தண்
ணீருமிறைத் தற்கின்னம் நேராமற்—பாரிலவர்
வேறுகுலப் பேர்தரித்து மேவுமத னுலடுத்து
பேறு கிடைத்திடுமோ பின் [84)

பின்னுமுன்னுந் தோன்ருத பேயனெனத் தேர்ந்து
சற்றுந், தன்னெறியைக் காட்டாதித்தாரணியிற்—
பொய்ந்நெறியாற், சங்கரமே செய்தார் சகலமையு
மின்னமென்ன, பங்கஞ்செய் வாரோ பரிந்து 85

பரிமேலும் நீண்டகணேப் பல்லக்கின் மேலுங்
கரிமேலுஞ் சென்றுகளித்தாங்—குரிய
பலமேன்மை கொண்டதன்றிப்பாரிலிவ ரும்மாற்
குலமேன்மை யுங்கொண்டனர் 86

கொற்றவரைமுன்வயமாக்கொண்டவரைக்கொண்
டுலகில், மற்றும்மையுங்கை வயமாக-பெற்றதனுல்
தற்பிரம சாதியென்றே சாதிக்குந் தன்மையது
சொற்பகா லந்தொடுத்துத்தான். 87

தொடுத்தவரை விட்டம்பைச் சும்மாக நொந்தா
லடுத்தநெறி யாமோவதுபோல்—கெடுத்தவரைத்
தான்கெடுக்கு மல்லாமற் றூரணியில் மற்றும்மை
யேன் கெடுக்குந் தெய்வ மினி 88

இனியாகி லுங்கருத்தி லெண்ணியிந்த மட்டிற்
சனிவிட்டாற் போலவரைத் தள்ளிப்—புனிதச்
சுருதிநெறி தேர்ந்தவையிற் சொல்லும் விதியைக்
கருதியது போலொழுக லாம் 89

கலேயோ டுணவுக்குங் கட்டுந்தா லிக்குங்
குலமனைவி யைக்கொடுபோய்க்கூசா—துலகிலுயர்
செத்தபெண்டீருக்கொருவன்செய்கருமத்திற்கொ
ப்பா, வைத்திடுவா ருள்ள மகிழ்ந்து 90

மமதேவதையெனுமோர் வாக்கியத்தா லன்னோர்
தமையேநீர் தெய்வமெனத் தாவிக்-கமனமுற
வேத்தித் தொழுதா லிகபரத்திற் குள்ளபலன்
வாய்த்திடுமோ சொல்வீ ருவந்து 91

வந்துபசி யில்லா வரங்கொடுக்கின் றேனெனக்கு
முந்திபழஞ் சோறுகொஞ்ச முக்கியமா-தந்திடுவீ
ரென்னுமொருவாக்கியம்போலீங்கவர்சொற்கேட்
டிருப்புப், பொன்னிழத்தலென்னேவிப்போது 92

போனதெல்லாம்போச்சுப் பொழுது விடிந்ததெனு
ம், ஆனமொழி போலினித்தா னுயினுநீர்—தானந்
தெரிந்தவரைப் போற்றிச் செய்தா லுதவி
தரும்பயன னேகமுண்டு தான் 93

தாயகமா யுங்கள் சனனமுதற் றொட்டுமண்ணில்
மாயு மரண வரைக்குமே—நேயமொடு
வேண்டுவன வெல்லாம் வியந்தளிக்கு மாசிரியற்
கீண்டும்மாற் செய்யுதவி யென் 94

எத்தனைநன்மைசெயினு மீங்கைவர்மட்டினிற்கிஞ்
சித்துமுத வாவஞ்சச் செய்கையி—னெத்தியெத்தி
வாயாலே பந்தவிடும் மார்க்கத் தவர்கென்னே
வோயாமற் செய்யு முதவி 95

உதவியற்ற காலத் தொருபோதும் வாரா
ரிதமிருந்தோர் சொல்லு மியம்பார்—நிதமுந்
தெருவழிபோம் போதுகண்டு சேவித்தழைத்தா
லிரும்வருகி றேனென்பா ரீங்கு 96

ஈயாதலோப ரெனினுமவர் தம்மனவிற்
காயா வறட்டுமரங் காய்த்ததெனத்—தாயார்
திதிகாலத் தாகிலுஞ்சிச் சீயென்றே ஆமந்
திதிசெய் தளிப்பீர் துணிந்து 97

துளவமொடு சந்தனமுந் தூளிதமுந் தந்து
களவாகச் சோபனங்கல் யாணம்—வளநீ
டுபநயனம் நூறிருநூ ருள்ளதளிப் பீரோல்
விபவமுண்டா மென்றடுப்பார் வேண்டி. 98

வேந்தற்கு வெற்றிவியா பாரிகளுக் கூதியமேற்
சேர்ந்தநெடுந்தற்சூத் திர்ற்குவிர்த்திநேர்ந்தவிவை
மூன்றுமவர்செய்கரும முக்கியத்தாலாவதென்றெ
ஞான்றுஞ்சொல் வார்கள் நயந்து [ஞ்(99)

நல்லதென்றூற் போதுமொரு நாளைக்குப் பத்துத்
தரம், வல்லகூடன் காரணைப்போல் வந்துவந்தே—
யல்லலுற்றுப், பல்லேக்கெஞ்சித்தாம் பரதவிப்பார்
கையிலொன்று, மில்லையென்றூற் போகாரொழுந்து

எழுதற் கரியவவ ரேய்க்குமா யத்தான்
முழுதுமோ சம்போகா முன்னர்—மழுவை
யெடுக்கிலுநம் பாம விகபரமிரண்டிற்
கடுத்தவகை செய்வீ ரறிந்து 101

அறிந்தவர்க ளாருமறி யார்க்கா நெறியைத்
திறந்தெடுத்துக் கூறவெனச் செப்பு—மறந்தெறிந்
தோர், தங்களுக்கெப் போதுந் தகுந்தகடனுதலா
லுங்களுக்குச் சொன்னதின்னு லோர்ந்து 102

ஓதருமிம் மாலே யொருநூறுந் தேர்ந்தவரெப்
போதுமவர்மயக்கிற்புக்கார்மெய்ப்—போதமென்
னும், செல்வ மிகுந்து சிறந்தவர்க ளாகியென்றும்
நல்வழிக்குச் செல்வார் நயந்து 103

---

அரிவானந்தசுவாமிகளால்

இயற்றிய

குலசங்கரமாலே

முற்றிற்று.

---



# ருஷிமூலபஞ்சகம்

---

## ஆசிரியவிருத்தம்.

செப்பரிய சமயமோ ரிருமூன்றி னிற்குமியல்
செறிவருண நான்கினிற்குஞ்
சேரறம் பொருளின்ப வீடிவையுணர்த்துமொரு
தேவவாக் கியமாகியும்
ஒப்பற்றதாயுஞ் சுயம்பா யனுதியா
யுள்ளவே தங்களைந்தும்
உலகினி லிருக்கமற் றவர்களுக் கதமெனறி
யுணர்த்தாம லேபிரபந்தக்
கற்பனைக் கதைகளாற் கட்டுண்டி டச்செய்த
கபடவஞ் சகமுனிவரிற்
கனவானெ னும்வியாத முனிமச்ச கந்திதன்
கருவினி லுதித்தவனெனில்
தற்பிராம ணன்செய் தவப்பிரா மணனெனச்
சந்தற்ப மேதுமுளதோ
சகலருமு ணர்ந்தினிது பகருவீர் சங்கரச்
சாதிருஷிமூல மிதுவே 1

பண்டுகைம் பெண்டிருவ ருடனுமஞ் சுகமான
பறவையுட னுங்கலந்த

படுகாமியைப்புங்க னூர்புலைச்சித்தரு
பராசரமுனிப்பயந்த
வண்டகுல வினனை முகோத்பவர்க ளேபிரா
மணரென வழுந்தும்வேத
வாக்கியமிருக்கவோர் தபசினுல் பிரமக்கி
யானத்தி னுலாமெனக்
கொண்டுல கெலாமயங் கச்சுலோகஞ் சொன்ன
கொடியபொய் யன்வியாசனைக்

கூறுதுறவிக்கியானி சன்யாசியென்றுமிக்
குவலய மயக்கறுத்துத்
தண்டொடு கமண்டலந் தாங்கிய முனித்தவசி
யென்றுமறை தற்குரியனோ
சகலரு முணர்ந்தினிது பகருவீர் சங்கரச்
சாதிருஷி மூலமிதுவே 2

மன்னவன் காதியருள்கௌசிக முனிப்பிரம
ருஷியன்றெனப்புகன்ற
மாமுனி வசிட்டன் தனைப்பெற்ற தாய்விலை
மடந்தைநலருந்துணைவியோர்
பன்னுசக் கிலியர்தரு பாவை யீன்றிடுமினிய
பாலநூற்றுவரி னுல்வர்

பார்ப்பாருமற்றவர்கள் பஞ்சமருமாகியிப்
படிமிசைவிளங்க வன்ஞேன்
என்னகுல மென்னருஷி யாவனென் றேபண்
டிராமன்முத லியவேந்தர்தாம்
ஏத்துங் குலக்குரு வெனக்கருதி யன்புற்
றிருப்பரது சபதமன்றே
தன்னெறி யுணர்ந்தவர்க ளிவ்விதப் படிறுநூல்
சாற்றுவ தியற்கையாமோ
சகலரு முணர்ந்தினிது பகருவீர் சங்கரச்
சாதிருஷி மூலமிதுவே 3

மானிற் கலைக்கோட்டு முனியும்வன சரமாதின்
வான்மீக னும்பரத்து
வாசன் கருக்குருவினுங்கிள்ளை யிற்சுகனும்
வபனனு விதர்தம்மினும்
கானநரி யிற்சம்பு கனுமதங் கன்மதங்
கத்தெரிவை யினுநாரதன்
கலைவெனுப் பவரினுங் கௌதமன் பசுவினுங்
கார்க்கேயன் வேசரியினும்
ஆனமாண் டவியன்மண் டூகத்தி லுந்தமி
ழகத்தியன் கும்பத்தினும்

அமர்கவுண் டன்னியன் கைம்பெண்டி னுஞ்சாங்கி [யா
யன்சுடலை காப்பவரினும்
தானுற்ப வித்தடவி யிற்றிரிந் துழலுவர்
தமக்குமொரு சாதியுளதோ
சகலரு முணர்ந்தினிது பகருவீர் சங்கரச்
சாதிருஷிமூலமிதுவே 4

கடையான ஞமலியிற் சௌனக னுதித்திவ்
வனைச்சனன் மாயடவியிற்
காமியார்த் தம்வந்த போதெதிர்ப் பட்டதைக்
கனிவொடு கலந்தவைகளாற்
திடமாக வீன்றபுத் திரர்களிற் சிலரலாற்
சிலரும னைப்பயிற்சி
செய்தற்ப காலமா சிரார்த்தகர் மப்பிண்ட
சீவனஞ் செய்து புவிமீ
தடைவான பிரமகுல மொன்றிருக் கவுநாண
மணுவளவு மின்றியாமே
அக்குலமெ னப்பொய்ச்சு லோகங்கள்சொலிமற்
றடுத்தகோத் திரமோவெனிற்
றடமருவு நதிமூல மொக்குமென் பாரது
தகுந்தமேற் குலமதாமோ
சகலருமு ணர்ந்தினிது பகருவீர் சங்கரச்
சாதிருஷிமூல மிதுவே 5

ருஷிமூலபஞ்சகம் முற்றிற்று

# விப்பிரபஞ்சகம்

## ஆசிரியவிருத்தம்

சொற்பெரு மனுதிசுரு திப்படிவி ராட்விஸ்வ
　　சொருபமாந் தத்சுயம்பின்
சோதிநிறை யானந்த பஞ்சாநநத்தினிற்
　　ேறுற்றிடா வகையினுலுந்
அற்புதமு குந்தனுந் தியிலுற்ப வித்தவோ
　　ரயனுலு தித்தவர்களென்
றதனுலு நான்காதி வருணமுந் தோன்றிய
　　வரேசநாட் சென்றபின்னர்
உற்பவித் திடுசென்ம சூத்திரர்க ளாய்வளமை
　　யோங்கு கோத்திரஸ்த ரெல்லாம்
ஊர்வசிவ லேச்சிப்பு லேச்சிவே டச்சியெனு
　　முற்றகுல ஹீனமதிலுள்
பற்பல விதப்பட்சி மிருகசெந் துவினுமுற்
　　பவித்தவர்க ளதனுலுமிப்
பயனற்ற பாப்பார்கள் பிராம்மணு ளென்றதாற்
　　பரியமநு சிதமென்பதே　1

தவமுனிக் கௌசிகன் கோத்திரத்தினில் வந்து
சம்பவித் துஞ்சங்கரர்
தசவம்ச விப்பிர ரெனச்சனித் துந்தகைமை
தாழிரு பிறப்பரென்றும்
அவமருவு சண்டாள சாதியிலு தித்துநெஞ்
சருவருப் பேதுமின்றி
யாதிபண் டிதர்வேத பாரகர் புராணிசர்
அர்ச்சக ரெனப்புளுகியே
குவலய மயங்கக் குளித்துநீ றிட்டுக்
குருக்களாச் சாரியென்றே
கூறுபல கள்ளவே டம்புனைந் தெவர்களுங்
கும்பிடப் பெற்றாலும் வீண்
பவமிதென் றுணரா திடக்கர மெடுத்தாசி
பகரினு மநேககாலம்
பயனற்ற பார்ப்பார்கள் பிராம்மணா ளென்றதாற்
பரியமநு சிதமென்பதே 2

தத்பிராம்ம ணக்ஷேத்ரகோத்ரசூத் ரப்பிரவரா
சாகையிவை யேதுமில்லார்
தந்தையுந் தாயுஞ்ச கோதரரு மொருவழிச்
சாம்பிரதா யஸ்தரல்லர்

அத்வைத போதப்ர மக்கியானி யருமல்லர்
அவனிதனின் மற்றவர்க்கோர்
ஆதார பஞ்சகிர்த் தியமுடைய ரல்லர்தகு
மானவுப யோகரல்லர்
நித்யதத் சீவன தொழிற்சுதந் தரமொன்றும்
நேர்ந்தவர்க ளல்லர்கள்ள
நெறியினுற் கோங்கமல ருக்குயிர்ப் பால்வளம்
நிறைந்தவா சனையையூட்டி
பத்மமல ரென்றகதை போலிவர்க ளின்னமும்
பலமேன்மை யுற்றபோழ்தும்
பயனற்ற பாப்பார்கள் பிராம்மணு ளென்றதாற்
பரியமநு சிதமென்பதே 3

மன்னுசமயங்களீ ராறினும் பரவுபல
வர்ணுச்ர மங்கட்கெல்லாம்
மாங்கல்ய முத்திரை சிருட்டித் தளித்தாசிர்
வதிக்காப் புரோகிதர்வளம்
துன்னுசுரு திகளெந்தி லொன்றல்ல தொருபனசை
தொடர்வரியி லோரொழுத்துஞ்
சொந்தமில் லாதவர் பிறர்க்கூழி யஞ்செய்து
சோறுக்கி வட்டிப்பவர்

இன்னும்வீடுகள்தோறு மாண்பெண்ணுமாச்சென்
றிரந்துண்ணும் யாசகர்தெரிந்
திருமருவு சுசனனைத் தீண்டுவர்க ளன்றிமற்
றெவனையுந் தீண்டாதவர்
பன்னும்ப ராதிசிரார்த்தகர்ம பிண்டங்கள்
பலவும்வாங் கிப்புசிக்கும்
பயனற்ற பாப்பார்கள் பிராம்மணு ளென்றதாழ்
பரியமநு சிதமென்பதே 4

எந்தவரு ணத்தவர்க ளென்னுமவர் தந்தைய
ரிறந்தகர் மாதிகாலத்
திணையாக வைத்துக் கொடுக்கின்ற வஸ்திர
மிலங்குமடி சஞ்சி குல்லா
விந்தைக் கடுக்கன் பவுத்திரந் தாழ்வடமு
மிதியடிக ளுங்கொண்டுதாம்
மேவிய படிக்கவர்கள் பெண்டி ரிறக்கில்மனை
வியையவட் கொப்பாகவைத்
தந்தைமிகு கூறையொடு தாலிகா லாழிமற்
றணிகரிய மணிபொன்னிறு
லரியகாதோலை மைச் சிமிள் மஞ்சள் குங்கும
மமுதுகரி காய்கள்யாவும்

பந்தமுற வேடிகொண்டு செல்வர்பின் னுந்தங்கள்
பாரியா ளென்பதானால்
பயனற்ற பாப்பார்கள் பிராம்மணாளென்றதாற்
பரியமநு சிதமென்பதே

விப்பிர பஞ்சகம் முற்றிற்று.



# வேமநபத்தியம்.

## தெலுங்கு.

மாலகுலமுநபுட்டி மாலனிதூஷிஞ்சு
த்விஜாலகேலனிட்டி தொங்கதனமு
ஆதிபுட்டினதாவு அரசிதாகூடரா
விஸ்வதா பிராம் விநரவேமா

தல்லியூர்வசிலஞ்ச தனயாலுமாதிக
தானுபிராஹ்முடனக தகுனெஜகதி
வசிஷ்டகுலமனி வசுதலோகெருகரா
விஸ்வதாபிராம வினரவேமா

முன்சொன்ன ருஷிகள் மிருகத்தின்வயிற்றிலும் பக்ஷிகள் வயிற்றிலும் சர்வ சண்டாள நீசக்கலப்பான பல ஜாதிகளில் பிறந்து காட்டில் கந்தமூல சமூலங்களையும் மாமிசங்களையும் புசித்து ஜோகி சங்கமாராக யாசித்து ஜீவனஞ் செய்துகொண்டு திரிந்த காலத்திலிருந்து

சேற்றிற் பிறந்த செங்கழுநீர்போல ஊர்வசி என்னும் தாசிக்குப்பிறந்தவர் வதிஷ்டமுனி. ஷை வதிஷ்டருக்கும் சக்கிலிச்சிக்கும் பிறந்தவர் சத்திமுனி. ஷை சத்திமுனிக்கும் புங்கனூர்புலச்சிக்கும் பிறந்தவர் பராசமுனி. ஷைபராசருக்கும் மீன்வாணிச்சிக்கும் பிறந்தவர் வியாசமுனி என்றும் வேமநராலும் கபிலராலும் சொல்லி யிருக்கிறது.

---

# இதன் கருத்து.

வெண்பா.

முன்னூன் முடிபை முழுதுணர்ந்த மூதறிஞர்
சொன்னூன் முடிபின் றுணிவுடைமை—சின்னூலி
னேழைமையை நீக்கி யிறைவன் றிருவடிபொற்
றூளை வணங்கு தலை.

குலசங்கரமாலை சம்பூரணம்.